6th February 1959]

*Bus routes*

*76 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

நமது ராஜ்யத்தில், ஜில்லாவாரியாக, இப்போது,

(i) 1 முதல் 15 மைல் வரை,

(ii) 15 முதல் 75 மைல் வரை,

(iii) 75 முதல் 250 மைல் வரை,

உள்ள ரூட்டுகளில் ஓடும் பஸ்கள் எத்தனை இருக்கின்றன ?

THE HON. SRI V. RAMAIAH : A statement[a] furnishing the particulars is placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : ராஜ்ய ரயில்வே போக்குவரத்து அதிகமாக இருக்கின்ற ஜில்லாக்களில் இருக்கின்ற பஸ் போக்குவரத்து வசதியைவிட ரயில் போக்குவரத்து குறைவாக இருக்கின்ற ஜில்லாவான வடாற்காடு ஜில்லாவில் பஸ் போக்குவரத்து வசதி குறைவாக இருக்கின்றது என்பதை சர்க்கார் அறியுமா ? அப்படியானால் அந்த ஜில்லாவில் அதிகமாக பஸ் போக்குவரத்து அதிகப்படுத்த சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI V. RAMAIAH : வடாற்காடு ஜில்லாவில் மாத்திரமல்ல, எல்லா ஜில்லாக்களிலுமே பஸ் போக்குவரத்தை அதிகப் படுத்தவேண்டும் என்பது தான் அரசாங்கத்தினுடைய எண்ணம்.

SRI S. LAZAR : இந்த மாத ஆரம்பத்திலிருந்து எற்கனவே ஓடிக்கொண்டிருந்த சில ரயில்கள் நிறுத்தப்பட்டுவிட்டதால் அந்த இடங்களில் அதிகமான பஸ்களை விடுவதற்கு சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI V. RAMAIAH : எல்லா இடங்களிலுமே பஸ் போக்குவரத்தை அதிகப்படுத்தவேண்டும் என்பது தான் அரசாங்கத்தினுடைய விருப்பம். அதில் விசேஷமாக ஏதாவது கஷ்டங்கள் ஏற்பட்டால் அதிகாரிகள் கவனித்து அதற்கு வேண்டிய வசதியை செய்து கொடுப்பார்கள்.

SRI M. SELVARAJ : இப்போது தென்னாற்காடு ஜில்லாவில் 1 முதல் 15 மைல் வரை ஓடிக்கொண்டிருக்கும் பஸ்களின் எண்ணிக்கை 19 என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதில் 10 பஸ்கள் டௌன் பஸ்கள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் அங்குள்ள மக்களுக்கு அதிகமான சௌகரியம் கிடைக்கவில்லை. ஆகவே, இப்போது 1 முதல் 15 மைல் என்றிருப்பதை 1 முதல் 25 மைல் என்று மாற்றி பஸ் போக்குவரத்தை அதிகப்படுத்த சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI V. RAMAIAH : இவ்விதம் நினைத்தவுடன் விதிகளை மாற்றிவிட முடியாது. தென்னாற்காடு ஜில்லாவில் மாத்திரமல்ல எல்லா ஜில்லாக்களிலுமே அதிகமாக பஸ் போக்குவரத்தை ஏற்படுத்த வேண்டும் என்பது தான் சர்க்காரின் எண்ணம். தென்னாற்காடு ஜில்லாவில் அதிகமான பஸ்கள் வேண்டுமென்றால் அங்குள்ள மக்கள் எல்லாம் ஒற்றுமையோடு இருந்து அரசாங்கத்தினிடத்தில் தங்கள் கோரிக்கையை தெரிவித்தால், அதைப்பற்றி பரிசீலித்து சர்க்கார் தக்க நடவடிக்கை எடுக்கும் என்பதில் சந்தேகமில்லை.

---

[a] Printed as Appendix III on page 234 infra.

[6th February 1959

Sri V. K. Ramaswamy Mudaliyar : Are the Government aware of the fact that there are still 1942 model old buses which are very rickety, with the result there are lots of breakdown and passengers are put to unnecessary inconvenience? So, will the Government take steps to put more buses?

The Hon. Sri V. Ramaiah : As far as the standard of vehicles in our State is concerned, I am proud to say that even in the private sector the operators have come forward to put in the best vehicles available. There might be one or two cases where old vehicles are put in. But even new operators themselves feel that plying old rickety buses is not paying them and everyone is going in for new model buses.

The Hon. Sri C. Subramaniam : I may inform the hon. the Leader of the Opposition that if he cares to visit other States, he will find that even 1920 model vehicles are used there.

Sri V. K. Ramaswamy Mudaliar : It does not mean that we should have rickety buses.

The Hon. Sri C. Subramaniam : It does not mean that but the condition of the vehicles also should be taken into consideration, particularly, when we are not manufacturing our own vehicles. It is uneconomical to take them off the road simply because they are old models. I do not think we can afford the luxury of having only new model buses. That can happen when we have our own manufacturing programme and I hope the hon. the Leader of the Opposition will take the economy of the country also into his consideration.

Sri V. K. Ramaswamy Mudaliyar : I can speak from authority that it is very economical to run latest model buses instead of rickety buses.

*Medical College*

* 77 *Q.*—Sri K. Sattanatha Karayalar : Will the Hon. Minister for Revenue be pleased to state—

(*a*) whether there is any proposal to start another Medical College during the course of the Second Five-Year Plan period ; and

(*b*) if so, where and when?

The Hon. Sri M. A. Manickavelu : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Rayon Pulp plant*

* 78 *Q.*—Sri K. Sattanatha Karayalar : Will the Minister for Industries be pleased to state the possibilites of starting a rayon plup plant in the Nilgiris district?

The Hon. Sri R. Venkataraman : The Nilgiris District has not been considered suitable for the location of a rayon pulp plant as the resources of wattle and eucalyptus wood available there at present are inadequate for a unit of economic size.